ஓம்

பரப்பிரஹ்மணே

ஔவைப்பிராட்டியார்

திருவாய்மலர்ந்தருளிய

# ஆத்திசூடி மூலமும்,

திருத்துருத்தி - இந்திரபீடம்,

கரபாத்திர சுவாமிகளாதீனத்து

ஓர் அன்பர்

இயற்றிய

பாகியார்த்தமும், ஆந்தரார்த்தமும்.

இவை, சென்னை ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமத். கோ. வடிவேலு செட்டியார் அவர்களால்

பார்வையிடப்பட்டு,

ஸ்ரீமத். ராம. இராமலிங்க செட்டியார் அவர்களால்

சென்னை அமெரிகன் டைமெண்ட் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

ஓம்

தத் ஸத்.

பரப்பிரஹ்மணே நம:.

# முகவுரை.



எல்லாம் வல்ல விறைவன் நம்மனோர் சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ வீடுபெறுமாறு திருவாய் மலர்ந்தருளிய வேதத்தை முதனூலாகக்கொண்டு வெளிப்பட்டவை ஸ்மிருதி புராணேதிகாச முதலியனவாம். இவ்விரண்டையும் முதனூலாகவும் வழிநூலாகவுங்கொண்டு தேச பாஷைகளில் வெளிப்பட்ட நூல்கள் எண்ணிறந்தனவாம். அவ்வெண்ணிறந்த நூல்களுள், ஞானத்தாயாகிய ஔவைப் பிராட்டியார் அருளிச் செய்த ஆத்திசூடி என்பது மொன்றாம். அது நந்தமிழ்ப்பாஷைக்கண் ஒப்புயர் வில்லாது விளங்குவதென்பது பண்டிதர் முதல் பாமரரீறாயுள்ள யாவரும் செவ்வனே யறிந்த விஷயமாம் அது வேதார்த்தத்தை "அறஞ்செய விரும்பு" என்றற் றொடக்கத்தனவாக விதிமுகமாகவும், "இயல்வது கரவேல்" என்றற் றொடக்கத்தனவாக மறை (விலக்கு) முகமாகவும் கூறுவதென்பது பண்டிதரியாவரு மறிந்ததொன்றாம். புருஷார்த்தத்தை விரும்பு மக்களியாவர்க்கும் கற்பகத்தருப்போ லிருத்தல்பற்றி இது தமிழ்மக்க ளியாவராலும் படிக்கப்பட்டு வருகின்றது. இதற்குரை பல விருப்பினும் அவையாவுமதனது வெளிப்படைப் பொருளையே விளக்குவதன்றிக் குறிப்புப் பொருளை விளக்காமையான், அக்குறையை நிவிர்த்தித்தற்பொருட்டு இவ்வாத்திசூடிக்குச் செவ்விய வெளிப்படைப் பொருளுடன் குறிப்புப் பொருளும் தக்க பிரமாணத்துட னெழுதப்பட்டிருக்கின்றது.

3

# இரண்டாம் பதிப்பின் முகவுரை



இப்புத்தகத்தின் முதற்பதிப்புகள் செலவழிந்து போயினமை யின் இது கிடைப்பது அரிதாய் விட்டது. பல முமுட்சுக்கள் இதனை அச்சிட்டு வெளியாக்க வேண்டுமென்று பன்முறை கேட்டுக்கொண்டமையால், எல்லாம் வல்ல இறைவனது கருணையினால், முன் பதிப்புகளை நன்றாய்ப் பரிசோதனஞ் செய்து இதனை அச்சிட்டு வெளியாக்கினேன். தவறிருப்பின் உலகர் பொறுக்க.

இங்ஙனம்,

ஒரன்பன்.



ௐ

மங்களம்.

பரப்பிரம்மணே நம:

# நிர்க்குண அஷ்டோத்திரம்.



ஓம் ஞானஸ்வரூபாய நம: 1
ஓம் ஆநந்தஸ்வரூபாய நம: 2
ஓம் ஆத்மஸ்வரூபாய நம: 3
ஓம் கூடஸ்தாய நம: 4
ஓம் அகண்டாய நம: 5
ஓம் அபரிச்சின்னாய நம: 6
ஓம் ஆதியே நம: 7
ஓம் அநாதியே நம: 8
ஓம் காரணாய நம: 9
ஓம் அகாரணாய நம: 10
ஓம் அஹேயாய நம: 11
ஓம் அகர்த்ராய நம: 12
ஓம் அகர்மணாய நம: 13
ஓம் அக்ரோதாய நம: 14
ஓம் அவ்யாகிர்தாய நம: 15
ஓம் அவாங்மனோகோசராய நம:
ஓம் அசங்காய நம: 17
ஓம் அசரீராய நம: 18
ஓம் அக்ஷராய நம: 19
ஓம் அசலாய நம: 20
ஓம் அச்சுதாய நம: 21
ஓம் அசம்சாரியாய நம: 22
ஓம் அணுவே நம: 23
ஓம் ஸ்தாணுவே நம: 24
ஓம் அத்வைதாய நம: 25
ஓம் அநந்தாய நம: 26
ஓம் அநாவிர்தாய நம: 27
ஓம் அநாதிமுக்தாய நம: 28
ஓம் அநுபாதேயாய நம: 29
ஓம் ஏகஸ்வரூபாய நம: 30
ஓம் அநேகஸ்வரூபாய நம: 31
ஓம் அபரோக்ஷாய நம: 32
ஓம் அபயாய நம: 33
ஓம் அபேதாய நம: 34
ஓம் அப்ரவிர்த்தாய நம: 35
ஓம் அப்ராணாய நம: 36
ஓம் அப்ரமேயாய நம: 37
ஓம் அபோக்தாய நம: 38
ஓம் அமலாய நம: 39
ஓம் அமிர்தாய நம: 40
ஓம் அலோபகாய நம: 41
ஓம் உக்ரதாய நம: 42
ஓம் ஏகாத்மனே நம: 43
ஓம் சர்வாத்மனே நம: 44
ஓம் சர்வக்ஞாய நம: 45
ஓம் சர்வகதாய நம: 46

ஓம் சர்வாகாராய நமஃ 47
ஓம் சர்வாபாவாய நமஃ 48
ஓம் சர்வகாரணாய நமஃ 49
ஓம் சர்வசமதாய நமஃ 50
ஓம் சர்வாதாராய நமஃ 51
ஓம் சர்வாதிஷ்டாய நமஃ 52
ஓம் சத்சித்தயாய நமஃ 53
ஓம் சத்தியாய நம 54
ஓம் சச்சிதானந்தாய நமஃ 55
ஓம் சாக்ஷியாய நமஃ 56
ஓம் சாந்தாய நம 57
ஓம் சின்மாத்ராய நமஃ 58
ஓம் சிவாய நம 59
ஓம் சூன்யாய நம 60
ஓம் மகாசூன்யாய நம 61
ஓம் ஸ்வயம்ப்ரகாசாய நமஃ 62
ஓம் ஸ்வப்ரகாசாய நமஃ 63
ஓம் சுத்தாய நமஃ 64
ஓம் புத்தாய நமஃ 65
ஓம் ஸ்வயம்புவே நம 66
ஓம் க்ஷேத்திரக்ஞாய நம 67
ஓம் திர்க்காய நமஃ 68
ஓம் திர்ஸ்யாய நம 69
ஓம் நாநாரூபாய நம 70
ஓம் நிர்விகாராய நமஃ 71
ஓம் நிஷ்க்கிரியாய நமஃ 72
ஓம் நிர்ச்சம்பந்தாய நம 73
ஓம் நிர்லேபாய நம 74
ஓம் நிருபாதிகாய நமஃ 75
ஓம் நிர்மலாய நமஃ 76
ஓம் நிரவயவாய நமஃ 77
ஓம் நிர்விகல்பாய நமஃ 78
ஓம் நிர்க்குணாய நமஃ 79
ஓம் நிராகாராய நமஃ 80
ஓம் நிரீஸ்வராய நமஃ 81
ஓம் நிரிந்திராய நம 82
ஓம் நிர்ஜீவாய நம 83
ஓம் நிஷ்ப்ரகிர்தயே நமஃ 84
ஓம் நிர்விசேஷாய நமஃ 85
ஓம் நிஷ்ப்ரபஞ்சாய நமஃ 86
ஓம் நிரஞ்சனாய நமஃ 87
ஓம் நித்யாய நம 88
ஓம் நித்யானந்தாய நமஃ 89
ஓம் நித்யமுக்தாய நமஃ 90
ஓம் நிராகாராய நமஃ 91
ஓம் நிர்விஷயாய நமஃ 92
ஓம் நிர்தோஷாயா நமஃ 93
ஓம் துரியாய நம 94
ஓம் துரியாதீதாய நமஃ 95
ஓம் பரமார்த்தாய நமஃ 96
ஓம் பரப்பிரஹ்மாய நம 97
ஓம் பிரத்தியக்ஷாய நமஃ 98
ஓம் புராணாய நமஃ 99
ஓம் புராதனாய நமஃ 100
ஓம் பூர்ணாய நமஃ 101
ஓம் மகத்தாய நமஃ 102
ஓம் முக்தாய நம 103
ஓம் வஸ்துவாய நமஃ 104
ஓம் விபுக்தாய நமஃ 105
ஓம் அதோமுகாய நமஃ 106
ஓம் ஸ்ரீ சற்குருவே நமஃ 107
ஓம் சம்பூர்ண சமாப்தாஃ 108

# ஆத்திசூடி வாக்கிய அட்டவணை.



# சொரூப ஸ்துதி.

உலகமுதற் பொருளையும்பர்க் குணர்வரிதாம் பொருளை யோ
கியமலா காசமத்தி னுச்சியினுட் பொருளைப், பலகலையின் பொரு
ண்முடிவின் முடிவான பொருளைப் பற்றறப்பற் றியபெரியோர்
பாவியவான் பொருளை, மலைநிலைவில் நுரை கடலி னுதித்தொடுங்கு
மாபோ லவிளைகண்ட முதிலமெல்லாங்கு தன்மூலப் பொருளை, மல
வபசர் கருதாகி யானுதும் பொருளை யெங்குமாம் பரம்பொருளை
யாமு வணங்குகுவம். (1)

ஆக்கைபெறும் புழுக்காம்மை யனைத்தனையாப் பொருளை
யருளொளியைப் பாபந்தக் கப்புறமா மறிவை, நீக்கமற வுயிர்
முழுவதிலுமிட மறவெங் கெங்கு நிறைந்துநின்ற முழுமுதலை நினை
விலெழுங் கடவுளைப், பாக்கியங்கள் செய்தனைத்துந் தவக்குறைகண்
முடிக்கும் பழவடியார் தமக்கெதுவு பகர்த்துணர்தற் பதத்தை, வாக்கு
மன விகற்பத்தா லளவுபடா வொன்றை மாசற்ற வெறுவெளியை
மனவெளியி லடைப்பாம். (2)

சாத்திரத்தா லளவுபடாத் தனிமுதலைப் பராபரத்தைத் தா
னே தானா, மாத்திரமாய் நிற்பதனை வாய்விட்டுப் பேசாத மௌன
வைப்பைக், காத்திரவா தனைகடந்த வறிஞருக்குப் பலமீயுங் கற்ப
கத்தைப், பார்த்தவிடந் தொறுநிகழும் பரமாக வியப்பொருளைப்
பணிதல் செய்வாம். (3)

பொன்னுல கத்தினிற் புவியி லத்தாத்
தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது
மன்னுயிர்ச் சோதியே வடிவ மியாவுமாய்த்
தன்னுவ கப்பொரு டொழுதி றைஞ்சுவாம். (4)

இரவியு மதியும் வானும் வாயுவு மனலு மப்பு
முரவிய மண்ணு மற்றை யுணர்பவன் றானு மாகிப்

தூக்கையுவ லிந்தியம் யல்லவகக கணமல
தேக்குபிரா ணனுமல்ல சிவனல சாட்சியல
போக்குவா வில்லாத பூரணச் யென்றருளு
மாக்குவன் றிருத்தாளை மறவா மலவணங்குவாம். (13)

எவருடை யருளால் யானே யெந்தமாம் பிறவென்பார்
சவருடைப் புவன மெல்லாஞ் சற்பித மென்றறிந்து
சவரிடை வெளிபோல் யானே சொரூப சுபாவ மானேன்
அவருடைப் பதும பாத மனுதினம் பணிகின் றேனே. (14)

என்னுடை மனது புந்தி யிந்திய மெல்லாம
என்னுடை யறிவி னாலே பிரகாசமுன் னிமமேம பாக்கி
என்னுடை சீயு மானு மேகமென் னைக்கியஞ் செய்ய
என்னுடைக் குருவாய்த் தோன்ற நீசனை யிறைஞ்சி னேனே.(15)

தந்தை தாயர் யென்னுயர்த் துணையுஞ் சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவுநீ யுனையலான் மற்றொரு துணைகாணேன்
அந்த மாதியு மளப்பருஞ் சோதியே யாதியே யடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவனெனுஞ் சிரகிரிப் பெருமானே. ()

ஆயுமாமறை முடிவினி லாகமச் சிரத்தி
லேயுமத்வைத இணையிலாச் சுகத்தினை யெளிதர்
ரேயுமாறருள் கரந்தெமக் குதவிய கருணைத்
தாயுமானசற் குருபரன் இருசரண சரணே. (17)

வடிவிலா மாயையால் வந்த பவத்திற்கு
முடிவிலா முத்திப் பொருட்கு—மடியோரி
னீண்ட பெருமா னிகனமறப் போதமளித்
தாண்ட பெருமா னடி. (18)

A

மும்மாயைக் கப்பால் முழுப்பாழுக் கப்புறத்தே
சும்மா விருக்கத் துரியங் கடந்தாலச்
செம்மா தனமளித்த சிவஞான தேசிகற்குக்
கைம்மாறு பாதமலர் காணேன் கடையேனே. (25)

உண்ணாத சோறு முடுக்காத வத்திரமும்
பண்ணாத பாயும் படுக்காத நித்திரையும்
எண்ணாத மனுவு மியம்பாத தோத்திரமுந்
கண்ணா லளித்தார்க்குக் கைம்மாறு காணேனே. (26)

தீராத வைம்பொறியுந் தீர்த்துச் சிவமாக்கிப்
போதாத வானந்தப் பிரமகண்மிசை வைத்தாருக்
காராத வன்பா லகங்குழைந்து மெய்யரும்பிப்
பாராத தெண்டனிட்டுப் பத்திசெயக் கடவேனே. (27)

கல்லாலின் கீழிருக்குங் கண்ணுதலவன் போலாகிக்
கல்லா வுலகிற் கருணையொடிங் கெய்தெனக்குச்
சொல்லாத சொல்லையொரு சொல்லா லுரைத்தார்க்குச்
சொல்லாத சொல்லானற் றோத்திரங்கள் செய்வேனே. (28)

தூயத் துரிய மழல்விடமு மானதே
தூயத் திரிவு மறுத்தான் குருநாதன்
மெய்யன் றிருமேனி விமலன் றிருமேனி
மெய்யன் றிருமொழியே வேதத் திருமொழியே. (29)

வானே முதலாம் பூதங்க ளல்லே கரண வகுப்பல்லே
யானும் பொறியு மைம்புலனு மல்லே யறியு மறிவல்லே
ஊனூருடம்பின் வயத்தாலே யுன்னைத் தனையே யென்றருளு
நானே நீயென் றருள்செய்த ஞான குருவை வணங்குவாம். (30)

மண்ணு முருகு மனமுருகு மாயை யுருகு மாலுருகும்
பெண்ணு முருகு மாணுருகும் பேதா பேத வகையுருகும்
அண்ண லுருகு மிடத்தமர்ந்த ஆத்தா னுருகு மரவணையான்
எண்ண யுருகுங் குருநாதன் என்பா லுரைத்த வோர்மொழியே. ()

தருவுருவாகி மௌனியாய் மௌனக் கொள்கையை யுணர் வுருவை யகற்றோர், சருவுருவாவ தெனக்கிலை யிந்தக் காயமோ பொய்யெனக் கண்ட, திருவுருவான ரூபவ நிலையுஞ் சேருமோ வாவலோ மெய்ய, அருவுருவாகி யல்லவாய்ச் சமய மனவிலா வானந்த வடிவே. (32)

செறிவாகு மலமற்று மாயை யற்றுந் திரிவிதமாங் கன்மமலத் திரளு மற்றுப், பிரிவாகுங் குணமறறுக் குறியு மற்றுப் பேதாபே தகைளற்றுப் பேசசு மற்று. அறியாமை யறிவற்றிங் கனந்த கோடி யாதவர்பா லழுகின்ற பரையு மற்றுக், குறியாத வானந்தக் குருவே நின்னைக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (33)

பொய்யாத புனன்மூழ்கிச் சாந்தமெனும் பொடிபூசிக் கருணைமணி புனைந்தெஞ் ஞான்று, மெய்யாக வுளமெல்லாம் மெய்ய மாகா னவிலாத நாமமு நவின்று பேசி, வையாறு மாறுறுங் கடந்துநின்ற வானந்தத் தெளிகின் னடிப்போ துக்கே. கொய்யாத மலர்க்கொண்டு கருசித்தேத்திக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (34)

ஆசிலன்ன மயகோசந் தாண்டி யப்பா லழியாத பிராணமய கோசந் தாண்டி, மாசின்மனோ மயகோசந் தாண்டி யென்று மாறுவிஞ் ஞானமய கோசந் தாண்டி, நாசமுறு மானந்த கோசந் தாண்டி ஞானவடி வாய்நின்ற சுடரே யுன்னைக், கோசமெலா மற்றசிவ கோசி யாகிக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே.(35)

தத்துவங்க ளாறாறும் பின்னிட் டப்பாற் றத்துவா தீதமாந் தன்னைக் கண்டு, பற்றொன்று மில்லாத பரையைக் கண்டு பரிந்து பார்த் துன்னருளி யதிலொ டுங்கி, வேற்றுமையே றானந்த வுருவங் கண்டு விழையாமல் விழைந் தப்பால் வெளியைக் கண்டு, குற்றமெ ல்லா மரீக்தந் தறவாய் நின்று குப்பிட்டே னென்பிறவி பின் பிட் டேனே. (36)

சத்திசித்தா னந்தமெனச் சாற்று மறைமுடிவை
யுத்தி பலவாக்கா லோதினவெண் — அத்தனடி
போற்றிப் புகழ்ந்து பூசிப்பாய் நெஞ்சகமே
நீற்றுருவைச் சொல்லெல்லால் வியந்து. (37)

நிர்க்குணனை நித்தியனை நின்மலனை நிச்சலனைச்
சற்குருவே யானவெனைப் பாக்கியனை—மற்புதனை
வாக்குந் துதிக்க மனநினைக்க வெண்சீர்த்தி
யொக்கவன் பொற்பதமே யாம். (38)

நன்றுருக் கீறிலா தாய் நெடுமுடி யடியி லாதாய்
அன்றுட னின்றி லாதா யதுவிது வெனவொ ணாதாய்த்
தொன்றுதொட் டெயகட் காகத் தோன்றிய வுருவ மொன்றே
என்றும்நாம் பரம் பரையா யிறைஞ்சிடுந் தெய்வ மாமே. (39)

அருவுரு வின்றி நின்ற ஆனந்த நாட்டா னிங்குத்
திருவுருக் கொண்டு தோன்றித் தெரிசன மளித்துப் பின்னும்
கருவுரு வாரா வண்ணங் கருணையாற் கடைக்க ணூட்டிப்
பெருவரு வான வின்பப் பேற்றினை யளிக்கப் பெற்றோம். (40)

நினையலா லொன்று முண்டோ வுனக்கென வுருவ முண்டோ
உனையெலாம் நின்பா லீந்து தன்னருள் பெற்றார் மேனி
தனையெலா முனதாய்க் கொண்டு சகத்தினி லுலவி நின்றாய்
இனையலா லருட்கு நேரா யேதுமே கைம்மா றில்லை. (41)

அறிவினுக் கறிவாந் தன்மை யனுக்கிர கித்தாய் போற்றி
சிறியனேன் சிறுமை தீர்த்துச் செம்பத மருள்வாய் போற்றி
பிறிவரும் பொருளா யெங்கும் பேதமற் றிருந்தாய் போற்றி
வறிவரு மறிவா னந்த வருட்டிருப் பாதம் போற்றி. (54)

அறிவினு லேயைக் தாக வறிவித்த வரசே போற்றி
அறிவினு லொன்று மூன்று றிருந்திட வமைத்தாய் போற்றி
அறிவுபே ரின்ப மாக வளித்திடு மத்தா போற்றி
அறிவரு மறிவா னந்த வருட்டிருப் பாதம் போற்றி. (55)

வடக்குளே தெற்குந் தெற்கில் வடக்கையுங் காட்டு வார்போ
லுடற்குளே யுயிரு மந்த வுயிர்க்குளே யுணர்வுங் காட்டி
நொடிக்குளே மலம கற்றி நுண்ணுணர் வாக்கி மீட்டும்
விடக்குளே பிறவா வண்ணங் காத்தருள் விகிர்த போற்றி. (56)

அருவமாய் நின்றாய் போற்றி யடியனேன் பொருட்டா யிங்க
னுருவமாய் வந்தாய் போற்றி யுயிர்பொரு ளுடலுங் கொண்டு
பருவமில் பாவி யேனைப் பரிந்தருள் செய்தாய் போற்றி
குருபரா போற்றி யுன்றன் கோகன கத்தாள் போற்றி. (57)

என்னையே யெனக்குத் தந்த வென்குரு கருணை வாழி
தன்னையே யடைந்த வெங்கள் சற்குரு மரபு வாழி
பின்னையே பிறந்து வாராப் பெரியவர் கூட்டம் வாழி
சின்மய மாக்கி யாண்ட சிவசுப்ர மண்யன் வாழி. (58)

ஸ்ரீ சற்குருநாதன்

திருவடிவாழ்க.

ஓம்

தத் ஸத்.

பரப்பிரஹ்மணே நம:

# ஆத்திசூடி

## மூலமும்,

## பாகியார்த்தமும் - ஆந்தரார்த்தமும்.



### காப்பு.

ஆத்தி சூடி யமர்ந்த தேவனை
யேத்தி யேத்தித் தொழுவோ மியாமே.

(பாகியார்த்தம்.) ஆத்தி சூடி - ஆத்தி மலர் மாலையைச் சூடிய பரமசிவன், அமர்ந்த - விரும்பிய, தேவனை - தேவனாகிய விநாயக க்கடவுளை, ஏத்தி யேத்தி - இடைவிடாது துதிசெய்து, தொழு வோம் - வணங்குவோம், யாம் - யாங்கள்—(என்றவாறு).

### இதற்குப் பிரமாணம் வருமாறு:—

#### குறுந்திரட்டு.

**எண்ணிய வெண்ணியாங் கெய்துவ கண்ணுதற்**
**பவள மால்வரை பயந்த**
**கவள யானைதன் கழல்பணி வோர்க்கே.**

(பொழிப்புரை.) நெற்றிக் கண்ணையும், பெரிய பவள மலை போலுந் திருமேனியையு முடைய பரமசிவன், ஈன்றருளிய கவளத்தைக் கொள்ளும் யானையினது முகம்போலும் முகத்தையுடைய விநாயக மூர்த்தியினது திருவடியை வணங்குபவர்க்கு (அவர்) கருதியவை கருதியவாறடையும்—(எ-று.)

விநாயக வணக்கத்தால கருதிய காரியம் தவறுது முற்றுப் பெறுவது பற்றி இவ்வாறு கூறப்பட்டது.

(அந்தரார்த்தம்.) ஆத்தி சூடி - (கற்பஞ வடிவ நாம ரூபங்களுக்கு ஆஸ்பதமாய) அஸ்தி பாதிப் பிரியத்தை அனன்னிய வடிவாய்த் தரித்துள்ள, அமர்ந்த தேவனை - நடுநிலை வடிவாய்ப்பொருந்திய ஆன்ம சொரூபத்தை. ஏத்தி யேத்தி - (பிரஹ்மாகாரவிருத்தி வாயிலாகப்) பன்முறையுஞ் சிந்தனை செய்து, தொழுவோம் யாம் - அதன்கண் யாம் ஐக்கியத்தை யடைவோம்.

## (இ. பி.) சிவஞான வள்ளலார்.

**மோகமெனுங் கடல்கடந்து முத்தியெனுங் கரைகாண்பான் முதிர்ந்த நாலாம், பாகமெனு மலர்கொண்டு பக்தியெனும் புனலாட்டிப் பரிந்து சாற்றிச், சோகமெனப் பாவித்துத் துரியமெனும் விளக்கேற்றிச் சோக நீக்கி, பாகமெனுங் கோயிலின்க ணறிவென்னுங் கணபதிக்கே யன்பு செய்வாம்.**

(போ-ரை.) (இரமறு சக மெய்யென்றுந் தேகநானென்று முள்ளே விரவிய) மோகமாகிய கடலைத் தாண்டிச் சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷமென்னுங் கரையைக் காணும்பொருட்டுப் பக்தி யென்னும் நீரினால் அபிடேகஞ் செய்து பரிபக்குவமான †சத்திநிபாத மென்னும் மலரைக்கொண்டு

† சத்தி—திருவருள்; பாதம்—படிதல்; நி—உபசர்க்கம்.

பிரியத்தோடு தரித்து, அவன் (சிவன்) நானெனப் பாவனைசெய்து துரியமென்னுந் தீபத்தை யேற்றி, சோகத்தினின்றும் நீங்கி உடம்பென்னுங் கோயிலின்க ணெழுந்தருளி யுள்ள உணர் வென்னும் விநாயகற்கு யாம் அன்பினைச் செய்வோம்—(எ-று.)

## 1. அறஞ்செய விரும்பு.

(பா-ட.) அறம் - தருமத்தை, செய - செய்தற்கு, விரும்பு - நீ யாசைப்படுவாயாக.

### * திருக்குறள்.

4-அதி. அறன்வலியுறுத்தல். 6-செய்யுள்.

**அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது**
**பொன்றுங்காற் பொன்றாத் துணை.**

(பொ-ரை.) (நாமிப்போது இளையேமாகலின்) இறக்குநாளிற் செய்வோமென்று நினையாமல், தருமத்தைத் (தினந்தோறுஞ்) செய்யக்கடவர்; அவ்வாறு செய்யும் தருமமானது, உடம்பினின்று முயிர் போங்காலத்து (அவ்வுயிர்க்கு) அழியாத துணையாம்—(எ-று.)

(ஆ-ம்.) அறம் - (ஞானசொரூபமாயுள்ள தன்னை யுணருமாறு) சர்வசங்கப் பரித்தியாகத்தை, செய - செய்தற்கு (எதுவாகிய சிரவணாதிகளில்.) விரும்பு - (எஞ்ஞான்றும் பிரயத்தன பூர்வகமாய்ச் சித்த விருத்தியை நிறுத்தத்) தலைப்பட்டிருப்பாயாக.

### (இ. பி.) அவிரோத வுந்தியார்.

**தாக்குபற் றற்ற சகலத்தி யாகத்தி**
**னேக்கு தருமமே தக்கீபற**
**உள்ளது வீட்டிற்கஃ தக்கீபற.**

---

* பாகியார்த்தம் ஒவ்வொன்றிற்கும் திருக்குறளே மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கின்றது.

(பொ-ரை.) ஒன்றிலுந் தாக்கற்றுடைய சர்வசங்கப்பரித்தியா கத்தினும் உயர்ந்த தருமமே இல்லை ; தருமமாவது பெரும்பான் மையும் தானந் தவமென்கின்ற இரண்டின்கண்ணே அடங்குத லின். மேலாய சிவத்தினிடத்தே உடல் பொருள் ஆவி மூன்றை யுஞ் சத்தியமாக ஒப்பித்து எவ்விடத்துந் தனது சுதந்திரத்துவந் தோன்றாமை நிற்றலின், இதற்கு மேலாய தானமும் இல்லை. அங் ஙனம் அது தோன்றாமல் நிற்போர்க்குச் சிவமேயொழியத் தானும் பிறரும் தோன்றாமையின், யான் செய்தேன் பிறர்செய்தார் என் னும் இகாகிதங்கள் சிறிதும் உண்டாகாமையின், இதற்குமே லாய தவமும் இல்லை. இவை வீட்டிற்கு உரியவாகலின், வீட்ட அறமுமாம்—(எ-று.)

## 2. ஆறுவது சினம்.

(பா-ம்.) ஆறுவது - உனக்குள்ளே தணியத்தகுவது சினம் - கோபமேயாம்.

31-அதி. வெகுளாமை. 3-செய்யுள்.

**மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய**
**பிறத்த லதனான் வரும்.**

(பொ-ரை.) யாவரிடத்திலும் கோபத்தை மறக்கக் கடவர். (ஒருவர்க்குத்) தீமையுடையவை யெல்லாம் உண்டாகுதல் அக் கோபத்தினாலே வரும் (ஆதலால்)—(எ-று.)

(ஆ-ம்.) * சினம்-(ஆநந்த சொரூபத்தில் பிறழ்ந்து நிற்கவொ ட்டாது வாதனை வசத்தால் பிறர் தீமை செய்தாரென்று மனத் தைத் தன்வசமாக்கி யெழுகின்ற) குரோத விருத்தியானது. ஆறு வது - அகம்பிரஹ்ம பாவனையால் ஒழியத்தகுவதாம்—(எ-று.)

* சினம் - நீட்டித்த கோபம், அது காமாதிகளுக்கு உபலட் சணமாம்.

(இ. பி.) ரிபு கீதை.

**அகம்பிரம பாவனையாற் காமங் கோப**
**மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை**
**யகம்பிரம பாவனையா லுலோப மோக**
**மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை**
**யகம்பிரம பாவனையால் மதமா னங்க**
**ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை**
**யகம்பிரம பாவனையா லிடம்பங் கர்வ**
**மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை.**

(பொ-ரை.) இடைவிடாது நான் பிரஹ்மமென்று பாவனை செய்வதால், காமக் குரோதம் முற்றும் ஒழியும்; இதில் சிறிதும் சந்தேகமில்லை; மேற்படி பாவனையால் லோபம் மோகம் முற்றும் ஒழியும்; இதில் சிறிதும் சந்தேகமில்லை; மேற்படி பாவனையால் மதம் மானம் முற்றும் ஒழியும்; இதில் சிறிதும் சந்தேகமில்லை; மேற்படி பாவனையால் இடம்பம் கர்வம் முற்றும் ஒழியும்; இதில் சிறிதும் சந்தேகமில்லை—(எ-று.)

## 3. இயல்வது கரவேல்.

(பா-ம்.) இயல்வது - கொடுப்பதற் கிசைவதை, கரவேல் - நீ இரப்பவர்க்கு ஒளிக்காதிருப்பாயாக.

23-அதி. ஈகை. 3-செய்யுள்.

**இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்**
**குலனுடையான் கண்ணே யுள.**

(பொ-ரை.) யான் வறியேனென்று (இரப்பவன்) சொல்லும் துன்பந்தரு மொழியை (பிறரிடத்தே) தான் சொல்லாமையும்,

(அதனைத் தன்னிடத்தே சொன்னவர்க்கு இல்லை யென்னுமற்) கொடுத்தலும், (ஆகிய விரண்டும்) நல்லகுடியிற் பிறந்தவனிடத்தே உண்டாயிருக்கும்—(எ-று.)

(ஆ-ம்.) இயல்வது — (ஆத்ம சொரூபமாயுள்ள தனது யதார்த்தத்தை யுணருமாறு அதற்கு வேண்டிய சாதனங்களை தனது வீரப்பாட்டிற்குத் தக்கவாறு) அப்பியசித்தலை. கரவேல் - (விட்ட விச்சையின் பரிணாம வடிவாய் பரிணமிக்காத திருவிடியால்). மறவாது யூகஞ்செய்வாயாக.

(இ. பி.) விவேக சூடாமணி.

எத்திற வேது வாலோ வெய்திய மநுடத் தேக
மத்திலு மார ணார்த்த மறிவதற் கேது வாக
வொத்தவாண் மையை யடைந்து முண்மையா மூத்திசோ
வெத்தனஞ் செய்யா மூட னென்றுமான் மாவைக் கொன்
[றோன்.

(பொ-ரை.) எவ்விதக் காரணத்தினாலேயோ மானிட தேகத்தைப் பெற்றும். அதிலும் வேதார்த்தங்களை யறிதற் கேதுவாகப் பொருந்திய விவேகத்தன்மையை யடைந்திருந்தும், யதார்த்தமாகிய மோக்ஷத்தை யடையுமாறு பிரயத்தனஞ் செய்யாத மூடனானவன், எப்பொழுதும் தனது ஆத்ம சொரூபத்தைக்கொன்ற புலையனாவான்—(எ-று.)

## 4. ஈவது விலக்கேல்.

(பா-ம்.) ஈவது - (அறநோக்கி ஒருவர் மற்றொருவருக்குக்) கொடுப்பதை. விலக்கேல் - நீ தடுக்காதிருப்பாயாக.

17-அதி. அழுக்காறுமை. 6-செய்யுள்.

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்

(பொ-ரை.) (ஒருவனால்) பிறர்க்குக் கொடுக்கப்படும் பொருளைக் குறித்து பொருமைப்படுவனது உறவானது, உடுக்கப்படுவதும் உண்ணப்படுவதும் இல்லாமலழியும்—(எ-று.)

(ஆ-ம்.) ஈவது - (கூடஸ்த சொரூபமாய் விளங்குந் தன்னையடைதற் கேதுவாயுள்ள வனுஷ்டானத்தை யாசிரியர்) உபதேசிக்கு மிடத்து. (அந்த உபதேசத்தை) விலக்கேல் - விபரீதத்தால் மறக்க முயலாதே.

(இ. பி.) திருவாசகம்

செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழி யாரிற்பன்னாள்
விழுகின்ற வென்னை விடுதிகண் டாய்வெறி வாயறுகா
லுழுகின்ற பூமுடி யுத்தர கோசமங் கைக்கரசே
வழிநின்று நின்னரு ளாரமு தூட்ட மறுத்தனனே.

(பொ-ரை.) தேனை வாயிலேயுடைய வண்டுகள் மூக்கால் கிண்டுகின்ற கொன்றை முதலிய மலர்களைச சடாபாரத்தில் தரித்துள்ள உத்தரகோசமங்கை யென்னுந் திவ்ய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! கொழுந்துவிட்டு எரிகின்ற விளக்கில் விரும்பி வீழ்ந்தழியும் விட்டிற் பறவைபோல மழலைச் சொற்களைப் பேசும் மங்கையரிடத்துப் பலகாலமும் விரும்பி மூழ்கி அழிகின்ற அடியேனை (அவர்பாணின்றும்) நீக்கச் செய்வாயாக ; ஆட்கொள்ளும் முறைமையில் எழுந்தருளி வந்து உனது அருள் நிரம்பிய ஞானோபதேசத்தை நீ யுபதேசிக்கவும் அதனை யான் (மோக வசத்தால்) கவனியாதொழிந்தனன் ; (இனி மோகமயலொழித்து வுனது அருள் நிரம்பிய ஞானோபதேசத்தை நீ வுபதேசிக்கின்ற முறைப்பிரகாரம் சித்த விருத்தியை யூகஞ்செய்து நிறுத்துவேன் என்னும் பொருள் எதிர்மறையினால் ஈண்டு கொள்ளத்தக்கது)—(எ-று.)

## 5. உடையது விளம்பேல்.

(பா-ம்.) உடையது - உனக்குள்ள பெருமையை. விளம்பேல் - (நீ பிறரறியச்) சொல்லாதிருப்பாயாக.

98-அதி. பெருமை. 9-செய்யுள்.

**பெருமை பெருமித மின்மை சிறுமை**
**பெருமித மூர்ந்து விடல்.**

(போ-ரை.) பெருமைக் குணமாவது (காரணம் உண்டாகிய விடத்தும் அஃது இயல்பாக நோக்கிச்) செருக்கில்லா திருத்தல். சிறுமைக் குணமாவது (காரணம் இல்லாத விடத்தும் அதனை ஏற்றிக்கொண்டு) செருக்கின் முடிவிலே சென்று விடுதல்—(எ-று.)

(ஆ-ம்.) உடையது - (அகண்ட சொரூப சாக்ஷாத்காரமாயுள்ள) ஆத்மானுபவத்தை. விளம்பேல் - * (ஜிஞ்ஞாசுவிற்கன்றி ஏனைய பாமர விஷயிகளுக்கு ஒருபோதும்) கூறாதிருப்பாயாக.

(இ. பி) ஞானவாசிட்டம்.

***இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமமே யென்னல் வேண்டும், வியப்புறவா சையிலாமுல்வார்க் கிவ்வா றோதின் மீளாத நீரகில் வீழ்த்த தாகும்,***

---

* ஜிஞ்ஞாசு - (உத்தம சம்ஸ்காரத்தினால் தனது யதார்த்த நிலையை) அறியும் விருப்புடையவன்.

பாமரன் - விதி நிஷேத போகங்களில் விருப்பத்தோடு சாஸ்திர வாசனையின்றி யிருப்பவன்.

விஷயி - சாஸ்திரானுசாரமாகப் போக நுகர்ச்சி யுடையவனாய் இகபர லோகங்களை யடையக் கர்மஞ் செய்பவன்.

**தியக்குறுபோ கத்தாசை தீர்க்து புத்தி தெளிந்தவுனைப் போல் வார்க்கே திகழத் தோன்று, மயக்கமற வுணர்த்தவல்ல குரு வைக் கிட்டி வருந்தியுந்தன் பிறப்பறுக்கு மகனு மாக்கே.**

(பொ-ரை.) முன்பு சீடனது இயல்பான பக்குவங்களைப் பரிசோதித்துப் பின்பு சர்வமுமாய் விளங்கிய பிரஹ்மஸ்வரூபமே நீ யென்று உபதேசிக்கவேண்டும்; அதிசயிக்கும்படி விருப்பத்திற் சுழலுபவர்களுக்கு இந்தப் பிரகாரஞ் சொன்னல் அது திரும்பாத நரகாக்கினியில் அவர்களைத் தள்ளிவிட்டதாம்; கலக்கம் பொருந் திய போகத்தினது பிரியத்தை விட்டு அறிவு தெளிந்திருக்கின்ற உன்னை யொத்தவர்களுக்கே பிரகாசமாய்த் தோற்றும், மயக்கமில் லாமல் அறிவிக்க வல்லமையுடைய வாசாரியரைக்கிட்டி வருத்த முற்றுவது தனது பிறவியை நீக்கிக்கொள்ளும் சீடனும் முன் சொ ன்ன பிரகாரமே யிருக்கவேண்டும்—(எ-று.)

## 6. ஊக்கமது கைவிடேல்.

(பா-ம்.) ஊக்கமது - (செய்தொழிலில்) மனவெழுச்சியை. கைவிடேல் - நீ கைவிடாதிருப்பாயாக.

60-அதி. ஊக்கமுடைமை. 4-செய்யுள்.

**ஆக்க மதர்வினுய்ச் செல்லு மசைவிலா**
**வூக்க முடையா னுழை.**

(பொ-ரை.) அசைவில்லாத மனவெழுச்சி யுடையவனிடத் தே பொருளானது தானே வழிகேட்டுக்கொண்டு செல்லாநிற் கும்—(எ-று.)

(ஆ-ம்.) ஊக்கமது - (அபரிச்சின்ன சொரூபத்தை யடைதற் கேதுவாய சிரவண மனன நிதித்தியாசனவாயிலாகப்பழகும் ஞான

னுஷ்டானத்தை விட்டு * அஞ்ஞான சந்தேக விபரீதங்களால் அயலாகாரமாக நேரிடினப்போது) மனோ தைரியத்தைக் கைவிடேல் - நீ விடாது மேற்கொண்டொழுகுவாயாக.

(இ. பி.) தாயுமானவர்.

**கேட்டலுடன் சிந்தித்தல் தேடிலா மெய்த்தெளிவால்**
**வாட்டமறு முற்பவநோய் மாறுமோ—காட்டமுற்று**
**மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்**
**பொய்யாம் பிறப்பிறப்புப் போம்**

(பொ-ரை.) தத்துவஞானத்தினாலன்றி நிவிர்த்தியடையாத சனன மரணப் பிரவாகரூபத் துன்பம் சிரவணத்தாலும், மனனத்தாலும், நிதித்தியாசனத்தினாலுமே நீங்காது; (ஆகலின்.) நிதித்தியாசனத்தின் பரிபாகஸ்திதியில் விளங்குகின்ற அகண்ட பிரஹ்மாகார விருத்தியில், சித்தம் தைலதாரைபோல் நிலைபெற்று ஞாதுரு ஞான ஞேயமின்றி பிரஹ்மாகாரமாய் அமர்ந்திருத்தலாகிய சமாதியனுபவம் வாய்த்தால் அக்கணமே மித்தையா வடிவ பவ வியாதியானது அத்தியந்த நிவிர்த்தியாம்.

## 7. எண்ணெழுத் திகழேல்.

(பா-ம்.) எண் - கணித நூலையும், எழுத்து - இலக்கண நூலையும், இகழேல் - இகழாமற் கற்றுக்கொள்வாயாக.

---

* அஞ்ஞானம் - பிரஹ்ம பாவனைமூடிப் பேதங்காட்டுவதாம்.
சந்தேகம் - குருவின் வாக்கிய நம்பாமற் குழம்புவதாம்.
விபரீதம் - நிரமறு சக மெய்யென்றுந் தேக நானென்றுங் கொள்ளு மோகமாம்.

40-அதி. கல்வி. 2-செய்யுள்.

**எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்**
**கண்ணென்ப வாழு முயிர்க்கு.**

(பொ-ரை.) அறியாதவர் (எண்ணென்று சொல்லுவனவும் மற்றை யெழுத்தென்று சொல்லுவனவும். ஆகிய இக்கலைகளிரண்டையும் (அறிந்தோர்) வாழ்தற்குரிய (சிறப்புடைய) மக்களுக்குக் கண்களாகும் என்று சொல்லுவார்—(எ-று.)

(ஆ-ம்.) எண் - (ஆதியாய் விளங்கும் அன்ம வடிவ சொரூபத்தில் அந்தக்கரண விருத்தி நிலைபெற்று ஆனந்தாகாரமாய் விளங்குவதற் கேதுவாகிய) மனனத்தையும், எழுத்து - அனுத்மாகார விருத்திகளைத் தடுத்து, வியாபக விளக்கத்தில் சித்தம் சித்திர தீபம்போல நிற்பதாகிய நிதித்தியாசனத்தையும், இகழேல் - நீ இகழாது மேற்கொண்டொழுகுவாயாக.

பிரம கீதை.

**வினவுற்ற கேள்விக்குக் கேட்பா னாகி மேவியகா ஷிபில் விழித்துக் காண்பா னாகி, மனனத்தின் மந்தாவாய் ஞானந் தன்னின் மதித்திடுளு தாவாகி மன்னு கின்றான், சொனவத் தற் பரனுகு மவனில் வேறாந் தோற்றமெலா மெய்யாகுந் தோற்ற மன்று, நினையிற்றற் பரனேயிவ் வெல்லா மென்று நினை வதும்வ நினைவான் நினைவு மேமே.**

(பொ-ரை.) கேட்கின்ற செவிக்குக் கேட்பவனுகியும், பொருந்திய கண்ணுக்கு விழித்துப் பார்ப்பவனுகியும், மனனத்தொழிலையுடைய மனத்திற்கு மனம் நிற்கின்றவனுகியும், மத்தியகத சொரூபமாய் விளங்கும் விஞ்ஞானத்திற்கு மதிக்கப்படாநின்ற விஞ்ஞாதாவாகியும், நிர்விகற்ப சமாதியில் நிலைபெற்றிருப்பவனே முன்

சொல்லிய அந்த கற்பனைவான். அவனுக்குப் பின்னமாய்த் தோற்றுகின்ற வினைத்தும் உண்மையான தோற்றமல்ல; நேராக யாலோசிக்கில், அந்தக்கற்பனே யிங்கனைத்து மென்று நினைப்பதுவே நினைக்கத்தக்க நினைவாகும்—(எ-று.)

## 8. ஏற்ப திகழ்ச்சி.

(பா-ம்.) ஏற்பது - ஒருவரிடத்திற் போய் இரப்பது. இகழ்ச்சி - உனக்குப் பழிப்பாகும்.

23-அதி. ஈகை. 2-செய்யுள்.

**நல்லா றெனினுங் கொளறீது மேலுலக**
**மில்லெனினு மீதலே நன்று.**

(பொ-ரை.) பிறர் (கொடுத்தலை வாங்கிக்) கொள்ளுதல் மேலுலகத்திற்கு நல்லவழி யென்பவர் உண்டாயினும், (அது) குற்றமாம்; (கொடுத்தவர்க்கு) அந்த மேலுலகத்தை யடைதல் இல்லையென்பவர் உண்டாயினும், கொடுத்தலே நல்லது—(எ-று.)

(ஆ-ம்.) ஏற்பது - (அநாதியாயுள்ள தனது நிஜவடிவை யடைதற்கேதுவாய * மனம் பிரஷ்டமாகாமையாகாது) தேகாதிப் பிரபஞ்சாகாரமாகவாதல், இகழ்ச்சி - ஜனன மரண வடிவ சம்சாரத்தை யடைந்து வருந்துதற்குரிய பழிப்பிற்கேதுவாம்.

### (இ. பி.) ஞானவாசிட்டம்.

**அடையவேண் டியதடைந்து மேற்றுயர மற்றின்ப மளவிலா தாய்க், கடையதாந் தருவிலங்கு பறவைகள்போல் வீணு**

---

* இராஜோகுண தமோகுண விர்த்தி ரகித மனம் அருவ மனமென்றும், அவற்றோடு கூடிய மனம் உருவ மனமென்றுஞ் சொல்லப்படும். முன்னது - ஞானிகளிடத்தும், பின்னது - அஞ்ஞானிகளிடத்து முள்ளனவாம்.

**ள்கள் கழியா தாகித், தடையிலா மனனத்தால் வாழ்வமே யுயர்வாளுள் சனனந் தீர்க்கே தா, ருடையபிறப் புயர்ந்ததாங் கிழவேசரிப்பிறப்பா மொழிந்த வெல்லாம்.**

(பொ-ரை.) அடையத்தக்க வாத்ம ஞானத்தை யடைந்து இனித் துன்ப நீங்கி ஆநந்தமானது அளவற்றதாய்க் கீழான விருக்ஷங்களும், மிருகங்களும், பக்ஷிகளுமாகிய விலைகளைப் போலவீணாகக் காலத்தைப் போக்காமல், தடையற்ற ஆத்மவிசாரத்தால் சீவிப்பதே மேலான வாயுளாம்; மறுபவத்தை யொழிந்தவருடைய சனனம் மேலானதாம். ஏனைய வனைத்தும் கிழக்கழுதையின் பிறவியாம்—(எ-று.)

## 9. ஐயமிட் டுண்.

(பா-ம்.) ஐயம் - பிச்சையை. இட்டு - இரப்பவர்க்குக் கொடுத்து. உண் - நீ உண்பாயாக.

23-அதி. ஈகை. 7-செய்யுள்.

**பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்**
**தீப்பிணி தீண்ட லரிது.**

(பொ-ரை.) (எந்நாளும்) பகுத்துண்ணுதல் பழகியவனைப் பசியென்று கூறப்படும் தீயநோய் தீண்டுதலில்லை—(எ-று).

(ஆ-ம்.) ஐயம் - (காரண சொரூபமாயுள்ள தன்னை யடையுமாறடைய முயலும் சீடர்களுக்கு ஆத்ம சாக்ஷாத்காரத்தை யடைதற்கேதுவாய) - ஞானானுசந்தான வளவாலுண்டாகும் சந்தேகமுதலியவற்றை, இட்டு - (ஞானாசாரிய ரருளியவாறு வொழுகி) வொழித்து, உண் - (அவ்வனுசந்தானத்தில் நிலைத்து, அங்குதயமாகும் நிரதிசயாநந்தத்தை) அனுபவித்திருப்பாயாக.

## (இ. பி.) கைவல்லிய நவநீதம்.

தடைகளே தெனிலஞ் ஞானஞ் சந்தேக விபரீ தங்கள
படர்செயு மந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
யுடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமி வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்த றெளித லாலே.

(பொ-ரை.) தடைகள் யாவெனின்; அஞ்ஞானம் சந்தேகம் விபரீதமென்பன. துன்பத்தையே விளைவிக்கு மந்த மூன்று விதமும் அநந்த செனமப் பழக்கத்தினு லடிக்கடி வரும். வந்தால், மேலாய ஞானப்பிரகாசம் கெடும்; ஆதலின், அம்மூன்றையு முறுதியாக நின்று கெடுத்தல் செய்தி: கேட்டல், சிந்தித்தல், தெளிதல், என்னு மிம்மூன்றேதுக்களாலும்—(எ-று.)

அனுபவா னந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகித்
தனுகா ணங்க ளாதி சகலமு மிறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேக மானசற் குருவுங் காண
நனவினிற் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவ மானான்.

(பொ-ரை.) சொப்பிரகாச வெழுச்சிக் கனுபவமாயுள்ள தடையற்ற வானந்தப் பிரவாகத்தில் மூழ்கி, மூழ்கவே யகண்ட பரிபூரணமே தானாகி, தனு கரண புவன போகங்கள் முதலிய சகல கற்பிதமு நசித்து, தெரிவே வடிவாகியும் சின்மாத்திரமானதால் மனது பரிபூரணமாகியும் பூரணமே மானிடத் திருமேனி கொண்டெழுந்தருளிய சற்குருநாதனுங் காணும்படி. தூங்காமல் தூங்குதலாகிய நனவிற்சுழுத்தி நிலையதாகியுஞ் சற்புத்திரனின்றனது சுபாவமாகிய நிரதிசயானந்த வடிவமாயினன்—(எ-று.)

## 10. ஒப்புர வொழுகு.

(பா-ம்.) ஒப்புரவு - உலக நடையை யறிந்து; ஒழுகு - அந்த வழியே நடப்பாயாக.

14-அதி. ஒழுக்கமுடைமை. 10-செய்யுள்.

**உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்**
**கல்லா ரறிவிலா தார்.**

(பொ-ரை.) உயர்ந்தோரோடு பொருந்த நடத்தலைக் கற்றிலாதவர் பலநூல்களையும் கற்றாராயினும், விவேகமில்லாதவராவார்— (எ-று.)

(ஆ-ம்.) ஒப்புரவு - (அகாரண சொரூபமாயுள்ள அஸ்தி பாதிப் பிரிய வடிவ சொரூபத்தை யுள்ளவா றடைதற்கேதுவாய) நிர்விகற்ப சமாதியை. ஒழுகு - சற்குரு கூறியவாறு அப்பியசிப்பாயாக

### (இ. பி.) மகாவாக்கியம்.

***சற்குருவி னருளாலுந் தவமுடிவின் பயனாலுஞ் சனன நீங்கிச், சிற்கனவாழ் வடைவதற்கே சிந்தைசெயுந் திறமுடையார் சில ராகி, நிற்குநிலை சாதனங்க ளொருநான்கு மறைநான்கு நீந்தி யோகவற்கமொடு சகலகலை களுந்தேர்ந்து ஞான நெறி வருவ ராமால்.***

(பொ-ரை.) ஞானாசாரியர் கிருபையினாலும், தவந் தவறுமற் செய்து முடிந்த பலத்தினாலும். பவத் துன்பம் நீங்கிப் பூரண ஞானச செல்வத்தைப் பெறுவதற்கே சிந்திக்கின்ற திறத்தையுடையவர்கள் நல்லறிவுள்ளவராகி அப்பியாசிக்கும் நிலையாகிய சாதன சதுஷ்டயங்களையும் வேதம் நான்கையும் ஆராய்ந்தறிந்தகன்று

இயமாதி யோகக் கூட்டத்துடன் சகல சாஸ்திரங்களையும் விசாரித்து அவற்றின் அபிப்பிராயங்களைக்கண்டு ஞானமார்க்கத்திற்கு வருவார்கள்—(எ-று.)

## 11. ஓதுவ தொழியேல்.

(பா-ம்.) ஓதுவது - நூல்களை வாசிப்பதில். ஒழியேல் - (எப்போதும்) நீங்காதிருப்பாயாக.

14-அதி. ஒழுக்கமுடைமை. 4-செய்யுள்.

***மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்***
***பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.***

(பொ-ரை.) (கற்ற) வேதத்தை மறந்தானாயினும் (வருணங் கெடாமையினாலே பின்னும்) ஓதிக்கொள்ளலாம் பிராமணனது உயர்ந்த வருணமானது ஆசாரங் குறைய அழியும் —(எ-று.)

(ஆ-ம்.) ஓதுவது - (அத்வைத சொரூபமாயுள்ள தன்னை யுணருதற்கேதுவாய வேதாந்த சாஸ்திரங்களைச் சற்குருவாயிலாகப்) படிப்பதை. ஒழியேல் - நீ (நிட்டை அபரோக்ஷ ஞானமுண்டாகுமளவும்) விடாதிருப்பாயாக.

(இ. பி.) வேதாந்தசூளாமணி.

***சிவபர விசாரணையே யுரைத்தலரி தாஞ்சாத்***
***திரப்பிரபஞ் சங்காமா திகளோதி விராமாங்***
***காவலுறு சாதிகரு மாதிகமொ டேதான்***
***கருதுமனக் கற்பிதமே மந்தமசாத் திரத்தின்***
***மேவுறுமிவ் விருதிறமு மாருயிர்மெய்க் காட்சி***
***விரோதிகளா தலின்ஞானம் பயிறற்கு முன்ன***
***ரோவுவசாத் திரப்பிரபஞ் சந்தான்மெய்ஞ் ஞான***
***வுதவியா மான்மகாட் சியின்பின்விடு வதுவாம்.***

(பொ-ரை.) சீவேசுர திலக்கணங்களை விசாரித்துக்கொண்டிருத்தலே சொல்லுதற் கரிதாகிய சாஸ்திரப் பிரபஞ்சமெனப்படும், காமக்குரோதாதிகள் வயத்தில் நிற்பதே தீவிரப் பிரபஞ்சமாம். விதிக்கடங்கிய வருணாசிரம தன்ம முதலியவற்றோடு தாமுடன்பட்டுச் சங்கற்பிக்கும் மனக்கற்பிதமே மந்தப் பிரபஞ்சமாம். அசாஸ்திரப் பிரபஞ்சத்திற் பொருந்தும் தீவிரம் மந்தம் என்னும இவ்விரண்டும் ஆத்ம தரிசனத்திற்கு விரோதமாயிருத்தலின், ஞானாப்பியாசஞ் செய்தற்கு முன்னரே நீக்கற்பாலனவாம், சாஸ்திரப் பிரபஞ்ச மெனப்படுவது உண்மை ஞானம் வாய்க்குமளவும் உதவியாம்; ஆத்ம தரிசனம் வாய்த்த பின்னர் விடத்தக்கதாம்—(எ-று.)

## 12. ஔவியம் பேசேல்.

(பா-ம்.) ஔவியம் - பொறாமைக் கேதுவாகிய சொற்களை, பேசேல் - (எப்போதும்) நீ பேசாதிருப்பாயாக.

17-அதி. அழுக்காறாமை. 3-செய்யுள்.

**அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்**
**பேணா தழுக்கறுப் பான்.**

(பொ-ரை.) (மறுமைக்கு) அறத்தையும் (இம்மைக்குச்) செல்வத்தையும் (தனக்கு) வேண்டாதவனென்று சொல்லப்படுவான் பிறனது செல்வத்தைக் (கண்டவிடத்து) மகிழாமல் பொறாமைப்படுவான்—(எ-று.)

(ஆ-ம்.) ஔவியம் - (அகர்த்தாவாயுள்ள தன்னை யறிய முயலாது இருவினைப்பயனால் விளையும் பிறனது பூஷணையில் வெறுப்பும், தூஷணையில் விருப்புமடைதலாகிய புடைபெயர்ச்சிக்கு ஏதுவான) விஷயாகாரச் சொற்களை, பேசேல் - (மறந்தும்) கூறாதிருப்பாயாக.

(இ. பி) நிபுகீதை.

புகல்சீவன் முத்தர்க்கும் பிராரத் தத்தாற்
பூடணமுந் தூடணமு மெங்கு முண்டே
யகமேவு மகம்பிரம நிச்ச யத்தா
லவர்சீவன் முத்தரலான் மற்றோர் செப்பும்
வெகுவான பூடணதூ டணங்க ளாலே
விமலமதா நிலைபெற்ற வன்னோர்க் கென்று
மிகழ்வான தெவையுமிலை யெனுமு ரக்தோ
டென்னிடைநா னின்பமுற விசைந்து நிற்பேன்.

(பொ-ரை.) மேலோர்களால் சிறப்பித்துச் சொல்லப்படும் சீவன் முத்தர்களுக்கும் பிராரத்வ வினையால் வரும் புகழும் இகழும் எவ்விடத்து முண்டாம். மனத்தின்கண் பொருந்திய யான் பிரமமென்னும் நிச்சயத்தோடு எழுந்தருளியிருக்கிற சீவன் முத்தர்க ளெல்லாம மேலனையோர் செய்யும் மிக்க புகழிகழ்களினாலே பரிசுத்தமான நிலையையுடைய அவர்களுக்கு எப்பொழுதும் இழிவானவை யெவையுமில்லையென்கிற நிச்சயத்தோடெனது நிஜவடிவத்தின்கண் நான் ஆநந்தமாகப் பொருந்தியிருக்கின்றேன்-(எ-று)

## 13. அஃகஞ் சுருக்கேல்.

(பா-ம்.) அஃகம் - உயர்ந்தோர் வழக்கோடு ஒத்து நடத்தலை, சுருக்கேல் - நீ குறைக்காதிருப்பாயாக.

43-அதி. அறிவுடைமை 6-செய்யுள்.

எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

(பொ-ரை.) உலகமானது எவ்விதத்தினால் நடப்பதாயிருக்கின்றது அவ்வுலகத்துடன் பொருந்தித் தானும் அவ்விதத்தால் நடப்பது அறிவாம்—(எ-று.)

(ஆ-ர்.) அஃகம் - (அகர்மண சொரூபமாயுள்ள ஆன்மானுபவத்தை அபரோக்ஷ வடிவாய் அமர்ந்துள்ள மகான்கள் நிலையினை அடைதற்கேதுவாகிய) தியான யோக சமாதியில் தலைப்பட்டிருத்தலே, சுருக்கேல் - (ஆண்டு வாசனை வசத்தால் எழாநின்ற நாம ரூப பரிணாமத்துக்கு இடந்தருதலாகிய வேதுவால்) குன்றுமாறு செய்யாதே.

(இ. பி.) பெருந்திரட்டு.

**ஓதிய தியானந் தன்னா லுற்றநற் பயனை யுள்ள**
**வேதமில் சமாதி சொல்லி னெய்திய வமிர்தந் தன்னின்**
**மீதுறு மின்பந் தானாய் மிகல்குறை வின்றி யுள்ள**
**நீதியாந் தராசி னுனெனாத் திருப்பதென் றறிக நீயே.**

(பொ-ரை.) முற்கூறிய தியானத்தினா லடைந்த நன்மையாகிய பிரயோசனவடிவை குற்றமற்ற சமாதியில் பிரிதலின்றி யிருத்தலாந் தன்மையைச் சொல்லுமிடத்து, மேற்கூறிய சமாதியிலடைவுற்ற நனவிற்சுழுப்தி யானந்தத்தினால் அதிகரித்து வளராநின்ற நிரதிசயாநந்தமே தன்வடிவமாய் உயர்தல் தாழ்தலில்லாது சமமாயிருக்கின்ற தராசின் நாவைப்போல உயர்வு தாழ்வென்னும் விருப்பு வெறுப்பற்ற மார்க்கமாகிய மத்தியகத நிலையில் சகல கேவலத்தின் வசமாகாது பிரிதலின்றி நீ யிருப்பாயாக—(எ-று.)

## 14. கண்டொன்று சொல்லேல்.

(பா-ம்.) கண்டு - ஒன்றைப்பார்த்து, ஒன்று - மற்றொன்றை, சொல்லேல் - (எப்போதும்) சொல்லாதிருப்பாயாக.

